அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

॥ श्रीः ॥



"एषा शंकरभारती विजयते निर्वाणसौख्यप्रदा"

ஏஷா ஶங்கரபா$^4$ரதீ விஜயதே நிர்வாணஸௌக்$^2$யப்ரதா$^3$

# श्रीजगद्गुरुग्रन्थमाला

## ஶ்ரீ ஜக$^3$த்$^3$கு$^3$ரு க்$^3$ரந்த$^2$மாலா

# ॥ धन्याष्टकम् ॥

# த$^4$ன்யாஷ்டகம்

ஶ்ரீ வாணீவிலாஸ் பிரஸ்
ஶ்ரீரங்கம்.
1963



॥ श्रीगुरुभ्यो नमः ॥

## ॥ समर्पणम् ॥

श्रीमच्छंकरदेशिकस्य महिता मूर्तिद्वयी या स्थिता
तत्रैका हि तिरोबभूव विजने केदारनाथस्थले ।
अन्या वर्णमयी तु भाष्यनिचयस्तोत्रप्रबन्धात्मना
सर्वत्रैव समुज्वला विजयते ताभ्यां तनुभ्यां नमः ॥ १ ॥

यस्तत्रास्ति लघुप्रबन्धनिचयः स्तोत्राणि भूयांसि वा
तेषां द्राविडभाषयाऽनुवदनं विद्वद्वरैः कारितम् ।
श्रीमच्छंकरसेविनी सुसमितिः सम्यक्प्रकाश्याधुना
विद्यातीर्थपदे समर्पयति तत् लोकोपकारक्षमम् ॥ २ ॥

शंकरगुरुसंस्थापितसर्वजगद्वन्द्यशारदापीठम् ।
शंकरसेवासमितिः प्रकरणमालार्पणादलंकुरुते ॥ ३ ॥

शंकरगुरुवररचितप्रकरणमालां शुभानुवादयुताम् ।
शंकरपरंपरागतविद्यातीर्थे समार्पिपत्समितिः ॥ ४ ॥

शंकरसेवारसिकाः शांकरसिद्धान्तसारसर्वस्वम् ।
शंकरसेवासमितिप्रकटनमालां सदाऽपि सेवन्ताम् ॥ ५ ॥

# பதிப்புரை.

ஸ்ரீ சிருங்ககிரி ஸ்ரீ ஜகத்குரு மஹா ஸந்நிதானம் அவர்களின் பரமானுக்ரஹத் தால் பிரசுரிக்கப்பட்டுவருகின்ற ஸ்ரீ ஜகத்குரு கிரந்தமாலையில் ஸ்ரீ சங்கரபகவத்பாதா சார்யார் அருளிய கிரந்தங்களில் **த⁴ன்யாஷ்டகம்**, என்ற பிரகரணத்துக்கு வழக்கம் போல பதவுரை பொழிப்புரை, விரிவுரைகளுடன் வெளிவந்துள்ளன.

**த⁴ன்யாஷ்டகம்:** உலகில யார் பாக்யசாலி என்பதை விவரித்துக் கூறுகிறார்.

ஸ்ரீ பகவத்பாதாள் அருளிய உயர்ந்த இந்த நூல் சிறந்த முறையில் வெளி வரும்படி பரமானுக்ரஹம் செய்து உள்ள சிருங்கேரி ஸ்ரீ ஜகத்குருவின் மலரடிகளை எப்பொழுதும் பணிவோமாக.

**K.V. சுப்பரத்னம் அய்யர்**,
பொதுக் கார்யதர்சி.
அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி

॥ श्रीः ॥

॥ ஸ்ரீः ॥

# ॥ धन्याष्टकम् ॥

# த⁴ன்யாஷ்டகம்

**ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யர் அருளியது.**

[**த⁴ன்யாஷ்டகம்** எட்டு சுலோகங்கள் கொண்டது வாழ்வில் பணம், பதவி முதலான பேறுகளைப் பெற்றவர்களை மஹா பாக்யசாலிகளாகவும் மற்றவர்களை பாக்யஹீனர்களாகவும் யாவரும கருதுகின்றனர் ஆசார்யாள் இம்மாதிரி கருதவில்லை. ஸத்யலோகம் வரையிலும் எந்த லாபத்தைப் பெற்றபோதிலும் அதனுல் பயனில்லை என்பதை 'குர்வஷ்டகத்திலும்' 'அநாத்ம ஸ்ரீ வீகர்ஹணத்திலும்' பகவத்பாதாள் நன்கு காட்டியிருக்கிருர் இந்த பிரகரணத்தில் யார் பாக்யசாலி என்ற கேள்விக்கு விடைதருகிருர் பாக்யசாலிகள் இன்ன இன்ன விதமாக இருப்பார்கள் என்று இதில கூறுகிருர். இதிலிருந்து பாக்யசாலிகளின் லக்ஷணத்தைக்கண்டு பிடிக்கலாம் ஆத்ம லாபத்தை விடச் சிறந்த லாபம் இல்லை எனப் பெரியோர்கள் கூறுவர். ஆத்ம லாபத்திறகு எவன் முயற்சி செய்கிருனே அவனே பாக்யசாலி என்று இதில் கூறுகிருர். ஒவ்வொரு சுலோகத்திலும் **"धन्या" "த⁴ன்யா"** என்ற பதம் இருப்பதாலும் தன்யர்களைப் பற்றிப் பேசுவதாலும் இதற்கு **த⁴ன்யாஷ்டகம்** என்ற பெயர் ஏற்பட்டிருக்கிறது.]

**तज्ज्ञानं प्रशमकरं यदिन्द्रियाणां**
**तज्ज्ञेयं यदुपनिषत्सु निश्चितार्थम् ।**
**ते धन्या भुवि परमार्थनिश्चितेहाः**
**शेषास्तु भ्रमनिलये परिभ्रमन्ति ॥ १ ॥**

**தஜ்ஜ்ஞானம் ப்ரஶமகரம் யதி³ந்த்³ரியாணும்**
**தஜ்ஜ்ஞேயம் யது³பநிஷத்ஸு நிஶ்சிதார்த²ம் ।**
**தே த⁴ன்யா பு⁴வி பரமார்த²நிஶ்சிதேஹாः**
**ஶேஷாஸ்து ப்⁴ரமநிலயே பரிப்⁴ரமந்தி ॥ 1 ॥**

**यत्** = எது,
**யத்**

**इन्द्रियाणां** = புலன்களுக்கு,
**இந்த்³ரியாணும்**

**प्रशमकरं** = அடக்கத்தைக் கொடுக்கிறதோ,
**ப்ரஶமகரம்**

| | | |
|---|---|---|
| **तत्** | = | அது, |
| **தத்** | | |
| **ज्ञानं** | = | அறிவு, |
| **ஜ்ஞானம்** | | |
| **यत्** | = | எது, |
| **யத்** | | |
| **उपनिषत्सु** | = | வேதாந்தங்களில், |
| **உபநிஷத்ஸு** | | |
| **निश्चितार्थं** | = | தீர்மானிக்கப்பட்ட பொருளோ, |
| **நிஶ்சிதார்த2ம்** | | |
| **तत्** | = | அது, |
| **தத்** | | |
| **ज्ञेयं** | = | அறியத்தகுந்தது, |
| **ஜ்ஞேயம்** | | |
| **भुवि** | = | பூமியில், |
| **பு4வி** | | |
| **परमार्थनिश्चितेहाः** | = | (எவர்கள்) உண்மைப்பொருளில் உறுதியான |
| **பரமார்த2நிஶ்சிதேஹா:** | | முயற்சி உள்ளவர்களோ, |
| **ते** | = | அவர்கள், |
| **தே** | | |
| **धन्याः** | = | பாக்யசாலிகள், |
| **த4ன்யா** | | |
| **शेषास्तु** | = | மற்றவர்களோவெனில், |
| **ஶேஷாஸ்து** | | |
| **भ्रमनिलये** | = | ப்ராந்தியைத்தரும் இடத்தில, |
| **ப்4ரமநிலயே** | | |
| **परिभ्रमन्ति** | = | சுற்றிச் சுற்றி வருகின்றனர். |
| **பரிப்4ரமந்தி** | | |

உலகில் எத்தனையோ புதுப்புது விஷயங்களை ஆவலுடன் சிரமப்பட்டுத் தெரிந்து கொள்கிறோம். இந்த அறிவு நம்புலன்களை மேலும் மேலும் கிளப்பி விடுகின்றன. இவைகளால் நமக்கு நன்மை இல்லை இந்த அறிவு பெற்றவர்கள் உலகில திண்டாடுவதை நாம் பார்க்கிறோம். ஆகையால எந்த அறிவைப் பெற்றால் புலன்கள் அடங்குமோ அதுதான் ஞானம ஆகவே உபநிஷத்தில் கூறப்பட்ட ப்ரஹ்மத்தைத் தான் அறியவேண்டும். இதை அறிந்தால் தான் புலன்கள் அடங்கும் இந்த உண்மை அறிவைப் பெற உறுதியுடன் முயறச்சிப்பவாகள்தான் பாக்யசாலிகள் மற்றவர்களெல்லாம ப்ராந்தர்கள். மேல்நிலைக்கு வர முடியாமல் கீழேயே சுற்றிச் சுற்றி வருகின்றனர். **(1)**

**(அவதாரிகை)** மேல் நிலையை அடைவதற்கு உபாயங்களைக் கூறுகிறார்: -

**आदौ विजित्य विषयान्मदमोहराग-**
**द्वेषादिशत्रुगणमाहृतयोगराज्याः ।**
**ज्ञात्वा मतं समनुभूय परात्मविद्या-**
**कान्तासुखं वनगृहे विचरन्ति धन्याः ॥ २ ॥**

**ஆதௌ3 விஜித்ய விஷயான் மத3மோஹராக3-**
**த்3வேஷாதி3 ஶத்ரு க3ணமாஹ்ருத யோக3ராஜ்யா: ।**
**ஜ்ஞாத்வா மதம் ஸமனுபூ4ய பராத்மவித்3யா-**
**காந்தாஸுக2ம் வனக்3ருஹே விசரந்தி த4ன்யா: ॥ 2 ॥**

**आदौ** = முதலில்,
**ஆதௌ3**

**विषयान्** = சப்தம் முதலான விஷயங்களையும்,
**விஷயான்**

**मद** = கர்வம்,
**மத3**

**मोह** = விவேகம்,
**மோஹ**

**राग** = ஆசை,
**ராக3**

**द्वेषादि** = வெறுப்பு முதலான,
**த்3வேஷாதி3**

**शत्रुगणं** = எதிரிக்கூட்டத்தையும்,
**ஶத்ருக3ணம்**

**विजित्य** = ஜயித்து,
**விஜித்ய**

**आहृतयोगराज्याः** = மனோநிக்ரஹம் என்ற ராஜ்யத்தை ஸ்வாதீனம் செய்துகொண்டு,
**ஆஹ்ருதயோக3ராஜ்யா:**

**मतं** = உபநிஷத்ஸித்தாந்தத்தை,
**மதம்**

**ज्ञात्वा** = அறிந்து,
**ஜ்ஞாத்வா**

**परात्मविद्याकान्तासुखं** = பரமாத்ம ஞானம் என்ற ஸ்திரீயிடமிருந்து கிடைக்கும ஸுகத்தை,
**பராத்மவித்3யாகாந்தாஸுக2ம்**

**समनुभूय** = அநுபவித்து,
**ஸமனுபூ⁴ய**

**धन्याः** = பாக்யசாலிகள்,
**த⁴ன்யாஃ**

**वनगृहे** = அரண்யகிருஹத்தில்,
**வனக்³ருஹே**

**विचरन्ति** = ஸஞ்சரிக்கின்றனர்.
**விசரந்தி**

உலகில் உயர் நிஃலக்குப் போகவொட்டாமல் தடுப்பது சப்தம் முதலான விஷயங்களும் அதன் மூலம் உண்டான ராகம் த்வேஷம் மதம், மோஹம் முதலியவைகளும் தான். இவைகள் நம் மனதிலேயே இருந்து கொண்டு நமக்கு எப் பொழுதும் தீங்கு விஃளவிப்பதால கோரமான உள்ளதிரிகள், இவைகஃள வெல்ல வேண்டும். இதற்கு யோகாப்யாஸம் மூலம் மனதை அடக்கவேண்டும். பிறகு உபநிஷத்துக்கஃள விசாரித்து ஆத்மாவை அறிந்தால் ஆத்மானந்தம் பெறலாம். விஷயானந்தத்தை அனுபவித்துப் பழகியவர்களுக்குப் புரிவதற்காக ஆத்மானந்தத் தை காந்தாஸுகமாக வர்ணிக்கிறுர். இவர்களுக்கு வனம் தான் வீடு. **(2)**

**त्यक्त्वा गृहे रतिमधोगतिहेतुभूताम्**
**आत्मेच्छयोपनिषदर्थरसं पिबन्तः ।**
**वीतस्पृहा विषयभोगपदे विरक्ता**
**धन्याश्चरन्ति विजनेषु विमुक्तसङ्गाः ॥ ३ ॥**

**த்யக்த்வா க்³ருஹே ரதிமதோ⁴க³திஹேதுபூ⁴தாம்**
**ஆத்மேச்ச²யோபநிஷத³ர்த²ரஸம் பிப³ந்தஃ ।**
**வீதஸ்ப்ருஹா விஷயபோ⁴க³பதே³ விரக்தா**
**த⁴ன்யாஶ்சரந்தி விஜனேஷு விமுக்தஸங்கா³ஃ ॥ 3 ॥**

**अधोगतिहेतुभूतां** = தாழ்ந்த நிஃலயை அடைவதற்குக் காரணமாக
**அதோ⁴க³திஹேதுபூ⁴தாம்** உள்ள,

**गृहे रतिं** = வீட்டில் ஆசையை,
**க்³ருஹே ரதிம்**

**त्यक्त्वा** = விட்டுவிட்டு,
**த்யக்த்வா**

**आत्मेच्छया** = ஆத்மஸ்வரூபத்தை அறிவதில் ஆசையால்,
**ஆத்மேச்ச²யா**

**उपनिषदर्थरसं** = உபநிஷத்துக்களில் கூறப்பட்ட விஷயத்தின்
**உபநிஷத³ர்த²ரஸம்** ரஸத்தை,

| | | |
|---|---|---|
| **पिबन्तः** | = | பானம் செய்துகொண்டு, |
| **பிப³ந்த:** | | |
| **विषयभोगपदे** | = | விஷயங்களை அனுபவிக்கும் நிலையில், |
| **விஷயபோ⁴க³பதே³** | | |
| **वीतस्पृहा** | = | ஆசை நீங்கியவர்களாய், |
| **வீதஸ்ப்ருஹா** | | |
| **विरक्ताः** | = | வைராக்யமுள்ளவர்களாக, |
| **விரக்தா:** | | |
| **धन्याः** | = | பாக்யசாலிகள், |
| **த⁴ன்யா:** | | |
| **विजनेषु** | = | ஜனஸஞ்சாரம் இல்லாத இடங்களில், |
| **விஜனேஷு** | | |
| **विमुक्तसङ्गाः** | = | பற்றற்றவர்களாய், |
| **விமுக்தஸங்கா³:** | | |
| **चरन्ति** | = | ஸஞ்சாரம் செய்கின்றனர். |
| **சரந்தி** | | |

வீட்டில் ஆசைவைப்பவன்தான் அதற்காகப் பலவித கர்மாக்களைச் செய்து அதோகதியடைகிறுன். ஆகையால் வீட்டில் ஆசையைத் துறக்கவேண்டும் ஆத்மாவை அறிவதில் தீவ்ரமான விருப்பத்துடன் உபநிஷத்துக்களை விசாரித்து அதில் கூறியுள்ள விஷயங்களை அனுஸந்தானம் செய்யவேண்டும். உலக விஷயங்களை அனுபவிப்பதில் சாபலயமே இருக்கக்கூடாது. பூர்ண வைராக்யத்துடன் ஒன்றிலும் பற்றில்லாமல் ஏகாந்தமான இடத்தில் ஸஞ்சாரம் செய்யவேண்டும். இவர்களே தன்யர்கள். **(3)**

**त्यक्त्वा ममाहमिति बन्धकरे पदे द्वे**
**मानावमानसदृशाः समदर्शिनश्च ।**
**कर्तारमन्यमवगम्य तदर्पितानि**
**कुर्वन्ति कर्मपरिपाकफलानि धन्याः ॥ ४ ॥**

**த்யக்த்வா மமாஹமிதி ப³ந்த⁴கரே பதே³ த்³வே**
**மாஞவமானஸத்³ருஶா: ஸமத³ர்ஶினஶ்ச ।**
**கர்தாரமன்யமவக³ம்ய தத³ர்பிதானி**
**குர்வந்தி கர்மபரிபாகப²லானி த⁴ன்யா: ॥ 4 ॥**

| | | |
|---|---|---|
| **बन्धकरे** | = | பந்தத்தை உண்டுபண்ணுகிற, |
| **ப³ந்த⁴கரே** | | |

# த⁴ன்யாஷ்டகம்

| | | |
|---|---|---|
| **मम** | = | என்னுடையது, |
| **மம** | | |
| **अहं** | = | நான், |
| **அஹம்** | | |
| **इति** | = | என்ற, |
| **இதி** | | |
| **द्वे पदे** | = | இரண்டு நிலைகளையும், |
| **த்³வே பதே³** | | |
| **त्यक्त्वा** | = | விட்டு, |
| **த்யக்த்வா** | | |
| **मानावमानसदृशाः** | = | மதிப்பு, அவமதிப்பு இரண்டிலும் ஸமமாக |
| **மாநாவமானஸத்³ருஶா:** | | இருப்பவர்களும், |
| **समदर्शिनश्च** | = | ஸமமான ப்ரஹ்மத்தைப் பார்ப்பவர்களுமான, |
| **ஸமத³ர்ஶினஶ்ச** | | |
| **धन्याः** | = | பாக்யசாலிகள், |
| **த⁴ன்யா:** | | |
| **कर्तारं** | = | ஸிருஷ்டி செய்கின்றவரும், |
| **கர்தாரம்** | | |
| **अन्यं** | = | பிரபஞ்சத்தைக காட்டிலும் வேறுக |
| **அன்யம்** | | இருக்கிறவருமான ஈசனை, |
| **अवगम्य** | = | அறிந்து, |
| **அவக³ம்ய** | | |
| **कर्मपरिपाकफलानि** | = | கர்மாவின் முடிவு பயன் இவைகளை, |
| **கர்மபரிபாகப²லானி** | | |
| **तदर्पितानि** | = | அவரிடம் ஸமர்ப்பணம் செய்தவைகளாக, |
| **தத³ர்பிதானி** | | |
| **कुर्वन्ति** | = | செய்கிறுர்கள். |
| **குர்வந்தி** | | |

சரீரத்தில நான் என்ற எண்ணம், இதைச் சேர்ந்த பொருள்களில் என்னுடையது என்ற எண்ணம் இந்த அஹங்காரம், மமகாரம் இவ்விரண்டும் தான் ஸம்ஸார பந்தத்திற்கு மூலகாரணம். இதை விட்டுவிடவேண்டும். இவைகள் உள்ளவர்களுக்குத்தான் சரிரத்தையோ, அதைச் சேர்ந்தவர்களையோ பூஜித்தால் ஸந்தோஷமும், அவமதித்தால் துக்கமும் ஏற்படும். இதை விட்டவர்கள் மானம், அவமானம் இரண்டையும் ஸமமாக பாவிப்பார்கள். எல்லாவற்றிலும் ஸமதிருஷ்டி இருக்கும். இவர்கள் தாங்கள் செய்யும் கர்மாக்களின் முடிவைப்பற்றியோ, பலனைப் பற்றியோ சிறிதும் கவலைப்படமாட்டார்கள். எல்லாவற்றையும் ஈசுவரனிடம் அர்ப்பணம் செய்து கர்மாக்களைச் செய்வார்கள். இவர்களே பாக்யசாலிகள். **(4)**

**त्यक्त्वईषणात्रयमवेक्षितमोक्षमर्गा**
**भैक्षामृतेन परिकल्पितदेहयात्राः ।**
**ज्योतिः परात्परतरं परमात्मसंज्ञं**
**धन्या द्विजारहसि हृद्यवलोकयन्ति ॥ ५ ॥**

**த்யக்த்வாஈஷணு த்ரயமவேக்ஷித மோக்ஷமர்கா$^3$**
**பை$^4$க்ஷாம்ருதேன பரிகல்பிததே$^3$ஹ யாத்ராः ।**
**ஜ்யோதிः பராத் பரதரம் பரமாத்ம ஸஞ்ஜ்ஞும்**
**த$^4$ன்யா த்$^3$விஜா ரஹஸி ஹ்ருத்$^3$யவலோகயந்தி ॥ 5 ॥**

| | | |
|---|---|---|
| **एषणात्रयं**<br>**ஏஷணுத்ரயம்** | = | தாரைஷணு (மஜனவியிடம் பற்று) புத்ரைஷணு (மக்களிடம் பற்று) வித்தைஷணு (பணத்தில் பற்று) இம்மூறையும், |
| **त्यक्त्वा**<br>**த்யக்த்வா** | = | விட்டு, |
| **अवेक्षितमोक्षमर्गा**<br>**அவேக்ஷிதமோக்ஷமர்கா$^3$** | = | மோக்ஷம் அடையும் வழியைக்கண்டு, |
| **भैक्षामृतेन**<br>**பை$^4$க்ஷாம்ருதேன** | = | பிக்ஷை எடுப்பதில் கிடைக்கும் அமிருதத்திற்கொப்பான அன்னத்தால், |
| **परिकल्पितदेहयात्राः**<br>**பரிகல்பிததே$^3$ஹ யாத்ராः** | = | தேஹ ஜீவனத்தை நடத்துகின்றவர்களாய், |
| **धन्या**<br>**த$^4$ன்யா** | = | பாக்யசாலிகளான, |
| **द्विजाः**<br>**த்$^3$விஜா** | = | பிராமணர்கள், |
| **रहसि**<br>**ரஹஸி** | = | ரஹஸ்யத்தில், |
| **इदि**<br>**இதி$^3$** | = | ஹிருதயத்தில், |
| **परात्परतरं**<br>**பராத் பரதரம்** | = | சிறந்தவற்றைக்காட்டிலும் மிகச்சிறந்ததான, |
| **परमात्मसंज्ञं**<br>**பரமாத்ம ஸஞ்ஜ்ஞும்** | = | பரமாத்மா என்று பெயருள்ள, |
| **ज्योतिः**<br>**ஜ்யோதிः** | = | பிரகாசத்தை, |
| **अवलोकयन्ति**<br>**அவலோகயந்தி** | = | பார்க்கிறுர்கள். |

மனைவி, மக்கள், பணம் இம்மூன்று ஆசைகளும் தான் ஏஷணத்ரயம் எனப்படும். இவைகள் இருந்தால் மோக்ஷத்திற்குச் செல்லும் வழியே தென்படாது ஆகவே இந்த ஆசைகளைவிட்டு மோக்ஷவழியில் சென்று பிக்ஷான்னத்தால் ஜீவனத்தை நடத்திகொண்டு ஏகாந்தமான இடத்தில் தியானத்தால் மனதில் ஜ்யோதி ஸ்வரூபமான பரமாத்மாவைக் காண்பவர்கள் தன்யர்கள். **(5)**

**नासन्न सन्न सदसन्न महसन्न चाणु**
**न स्त्री पुमान्न च नपुंसकमेकबीजम् ।**
**यैर्ब्रह्म तत्सममुपासितमेकचित्तै-**
**धन्या विरेजुरितरे भवपाशबद्धाः ॥ ६ ॥**

**நாஸன்ன ஸன்ன ஸத³ஸன்ன மஹஸன் ன சாணு**
**ந ஸ்த்ரீ புமான் ன ச நபும்ஸகமேகபீ³ஜம் ।**
**யைர்ப்³ரஹ்ம தத்ஸமமுபாஸிதமேகசித்தை-**
**த⁴ன்யா விரேஜுரிதரே ப⁴வபாஶப³த்³தா⁴꞉ ॥ 6 ॥**

| | | |
|---|---|---|
| **ब्रह्म**<br>**ப்³ரஹ்ம** | = | ப்ரஹ்மம், |
| **न असत्**<br>**ந அஸத்** | = | அஸத்து இல்லை, |
| **न सत्**<br>**ந ஸத்** | = | ஸத்து இல்லை, |
| **न सदसत्**<br>**ந ஸத³ஸத்** | = | ஸத்தாகவும் அஸத்தாகவும் இல்லை, |
| **न महत्**<br>**ந மஹத்** | = | பெரியதுமில்லை, |
| **नाणु च**<br>**நாணு ச** | = | சிறியதுமில்லை, |
| **न स्त्री**<br>**ந ஸ்த்ரீ** | = | பெண் அல்ல, |
| **न पुमान्**<br>**ந புமான்** | = | ஆணும் அல்ல, |
| **न च नपुंसकं**<br>**ந ச நபும்ஸகம்** | = | அலியும் அல்ல, |
| **एबीजं**<br>**ஏபீ³ஜம்** | = | ஒரே காரணப்பொருள், |
| **समं**<br>**ஸமம்** | = | ஸமமான, |

| | | |
|---|---|---|
| **तत्** | = | அந்த ப்ரஹ்மம், |
| **தத்** | | |
| **एकचित्तैः** | = | ஒன்றிலேயே மனம் நிலைத்துள்ள, |
| **ஏகசித்தை:** | | |
| **यैः** | = | எவர்களால், |
| **யை:** | | |
| **उपासितं** | = | த்யானம் செய்யப்பட்டதோ (அவர்கள்), |
| **உபாஸிதம்** | | |
| **धन्याः** | = | பாக்யசாலிகளாக, |
| **த⁴ன்யா:** | | |
| **विरेजुः** | = | விளங்கினார்கள், |
| **விரேஜு:** | | |
| **इतरेः** | = | மற்றவர்கள், |
| **இதரே:** | | |
| **भवपाशबद्धाः** | = | பிறப்பு இறப்பு என்ற பாசத்தால் கட்டப்பட்டவர்கள். |
| **ப⁴வபாஶப³த்³தா⁴:** | | |

ப்ரஹ்மமானது தர்மங்கள் ஒன்றும் இல்லாமல் ஆத்ம வஸ்துவாக விளங்குவதால் இதை வெளிப்பொருள்களைப் போல ஸத் என்றோ அஸத் என்றோ ஸத்தாகவும் அஸத்தாகவும் உள்ளது என்றோ சொல்லமுடியாது அது பெரியதுமில்லை, சிறியதுமில்லை, ஆணுமல்ல, பெண்ணும் அல்ல, அலியுமல்ல உலகில் நாம் நம்மைக் காட்டிலும் வேறாகக் காணும் பொருள்கள் ஒன்றிலும் அது சேர்ந்ததல்ல. எல்லாவற்றிற்கும் ஒரே மூலகாரணம் அது. இதுவே நம் ஆத்ம வஸ்து இதிலேயே மனதைச் செலுத்தி தியானிப்பவர்கள் தான் தன்யர்கள். மற்றவர்கள் ஸம்ஸார பாசத்தில கட்டுப்பட்டவர்கள். **(6)**

**अज्ञानपङ्कपरिमग्नमपेतसारं**
**दुःखालयं मरणजन्मजरावसक्तम् ।**
**संसारबन्धनमनित्यमवेक्ष्य धन्या**
**ज्ञानासिना तदवशीर्य विनिश्चयन्ति ॥ ७ ॥**

**அஜ்ஞானபங்கபரிமக்³னமபேதஸாரம்**
**து³:கா²லயம் மரண ஜன்ம ஜராவஸக்தம் ।**
**ஸம்ஸார ப³ந்த⁴னமநித்யமவேக்ஷ்ய த⁴ன்யா**
**ஜ்ஞானாஸினா தத³வஶீர்ய விநிஶ்சயந்தி ॥ 7 ॥**

| | | |
|---|---|---|
| **अज्ञानपङ्कपरिमग्नं** | = | அக்ஞானம் என்ற சேற்றில் அமிழ்ந்தியதும், |
| **அஜ்ஞானபங்கபரிமக்³னம்** | | |

| | | |
|---|---|---|
| **अपेतसारं** **அபேதஸாரம்** | = | ஸாரமற்றதும், |
| **दुःखालयं** **து³:கா²லயம்** | = | துக்கங்களுக்கு இருப்பிடமும், |
| **मरणजन्मजरावसक्तं** **மரணஜன்மஜராவஸக்தம்** | = | இறப்பு, பிறப்பு, மூப்பு இவைகளுடன்கூடியதும், |
| **अनित्यं** **அநித்யம்** | = | அழியக்கூடியதுமான, |
| **संसारबन्धनं** **ஸம்ஸாரப³ந்த⁴னம்** | = | ஸம்ஸாரமென்ற பந்தத்தை, |
| **अवेक्ष्य** **அவேக்ஷ்ய** | = | நன்கு அறிந்து, |
| **धन्याः** **த⁴ன்யா:** | = | பாக்யசாலிகள், |
| **ज्ञानासिना** **ஜ்ஞாஞஸிஞ** | = | ஞானம் என்ற கத்தியால், |
| **तत्** **தத்** | = | அதை, |
| **अवशीर्य** **அவஶீர்ய** | = | சிதற அடித்து, |
| **विनिश्चयन्ति** **விநிஶ்சயந்தி** | = | (ப்ரஹ்மத்தை) தீர்மானிக்கிறுர்கள். |

ஸம்ஸார வாழ்க்கை அக்ஞானம் என்ற சேற்றில் அமிழ்த்துகிறது. ஸாரமற்றது. துன்பங்களுக்கு இருப்பிடம். மரணம், பிறவி, மூப்பு இவை திரும்பித் திரும்பி வந்துகொண்டிருக்கும். ஸ்திரமுமல்ல இதை அறிந்து தத்வஞானத்தால் கட்டைப் பிளந்து வெளிப்படுபவர்கள் தன்யர்கள். **(7)**

**शान्तैरनन्यमतिभिर्मधुरस्वभावैः**
**एकत्वनिश्चितमनोभिरपेतमोहैः ।**
**साकं वनेषु विदितात्मपदस्वरूपै**
**तद्वस्तु सम्यगनिशं विमृशन्ति धन्याः ॥ ८ ॥**

**ஶாந்தைரனன்ய மதிபி⁴ர் மது⁴ர ஸ்வபா⁴வை:**
**ஏகத்வ நிஶ்சித மஞேபி⁴ரபேத மோஹைஃ ।**
**ஸாகம் வனேஷு விதி³தாத்மபத³ஸ்வரூபை**
**தத்³வஸ்து ஸம்யக³நிஶம் விம்ருஶந்தி த⁴ன்யா: ॥ 8 ॥**

| | | |
|---|---|---|
| **धन्याः**<br>**த$^4$ன்யா:** | = | பாக்யசாலிகள், |
| **शान्तैः**<br>**ஶாந்தை:** | = | மனத்தை அடக்கினவர்களும், |
| **अनन्यमतिभिः**<br>**அனன்யமதிபி$^4$:** | = | வேறு ஒன்றிலும் மனதைச் செலுத்தாதவர்களும், |
| **मधुरस्वभावैः**<br>**மது$^4$ரஸ்வபா$^4$வை:** | = | இனிமையான ஸ்வபாவம் உள்ளவர்களும், |
| **एकत्वनिश्चितमनोभिः**<br>**ஏகத்வநிஶ்சிதமனோபி$^4$:** | = | ஒரே தத்வத்தில் உறுதிகொண்ட மனம் உள்ளவர்களும், |
| **अपेतमोहैः**<br>**அபேதமோஹை:** | = | மோஹம் விலகியவர்களும், |
| **विदितात्मपदस्वरूपैः**<br>**விதி$^3$தாத்மபத$^3$ஸ்வரூபை:** | = | ஆத்மநிலையின் ஸ்வரூபத்தை நன்கு அறிந்தவர்களுமான மஹான்களோடு, |
| **साकं**<br>**ஸாகம்** | = | கூட, |
| **वनेषु**<br>**வனேஷு** | = | காடுகளில், |
| **तत् वस्तु**<br>**தத் வஸ்து** | = | அந்த வஸ்துவை, |
| **अनिशं**<br>**அநிஶம்** | = | எப்பொழுதும், |
| **सम्यक्**<br>**ஸம்யக்** | = | நன்கு, |
| **विमृशन्ति**<br>**விம்ருஶந்தி** | = | விசாரம் செய்கின்றனர். |

ஆத்மநிலையின் ஸ்வரூபத்தை அறிந்தவர்களின் மனதும் இந்திரியங்களும் அடங்கி இருக்கும். வேறென்றிலும் மனம் செல்லாது. ஒரே தத்துவமான ஆத்மா விலே மனம் உறுதியுடன் நிலைத்து நிற்கும். மனம் அடங்கி விட்டதால் அவர்களின் ஸ்வபாவம் இனிமையாக இருக்கும். மோஹம் விலகிவிடும் இந்த மஹான்களுடன் காட்டில் எப்பொழுதும் ப்ரஹ்மத்தை நன்கு விசாரிப்பவர்களே பாக்யசாலிகள்.

**த$^4$ன்யாஷ்டகம் முற்றும்.**